# நன்னூற் காண்டிகை உரையும் நாவலர் பெருமானும்

ஆசிரியர் :
வித்துவான் எவ். எக்ஸ். ஸி. நடராசா

வெளியீடு :
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
காரைநகர்.

# நன்னூற் காண்டிகை உரையும் நாவலர் பெருமானும்

ஆசிரியர் :

வித்துவான் எவ். எக்ஸ். ஸி. நடராசா அவர்கள்

வெளியீடு :
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
காரைநகர்.

உ

# பதிப்புரை

இலக்கண நூல்கள் குறித்தும் இலக்கண முடிபுகள் சில குறித்தும் கருத்து வேறுபாடுகள் உண்டாவதையும், அவைகள் அறிஞர்களால் ஆராயப்பட்டு உண்மை நிலைநாட்டப்படுவதனையும் நாம் அறிந்திருக்கின்றோம். இந்த வகையில் எழுந்ததே இந்நூல். விசாகப் பெருமாளையர் எழுதிய காண்டிகை உரையைத் தழுவியும் கூட்டியும் திருத்தியும் புதுக்கியுமே நன்னூலுக்கு நாவலர் உரை எழுதினார் என்பது ஒரு சாராரின் கொள்கை. அக்கொள்கையைத் தக்க சான்றுகள் காட்டி மறுத்து, இந்நூலை எழுதியுள்ளார் வித்துவான் எவ். எக்ஸ். ஸி. நடராசா அவர்கள்.

வித்துவான் நடராசா, அரச கரும மொழித் திணைக்களத்தில் உதவி அத்தியட்சகராக இருந்தவர்; பழுத்த தமிழறிஞர்; இலக்கண நூல்களை ஆராய்ச்சிக் கண் கொண்டு நோக்குபவர்; நல்ல சிந்தனையாளர்; 'இலக்கணம் வேண்டாம், எப்படியும் எழுதலாம்' என்று வாளா மொழிபவர்களுக்குச் சிம்ம சொப்பனம் போன்றவர்.

இந்நூலை வெளியிடுவதில் யாம் பெருமகிழ்ச்சி அடைகின்றோம்.

இந்நூலுக்கு இலக்கிய கலாநிதி, பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களும், இலக்கண வித்தகர், பண்டிதர் இ. நமசிவாயம் ஜே. பி. அவர்களும் அணிந்துரைகள் வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். அப்பெரியார்களுக்கு எமது உளங் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

இந்நூலைச் சிறப்புற அச்சிட்டுதவிய செட்டியார் அச்சகத்தினர்க்கும் எமது நன்றி உரித்தாகுக.

காரைநகர்,
12-10-82.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தார்

உ

இலக்கிய கலாநிதி,
பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள்
வழங்கிய

# அணிந்துரை

இலக்கியக் கருத்துக்களை உள்ளவாறு அறிதற்கும், கருத்துக்களைத் தெளிவு பெற எழுதுதற்கும், பேசுதற்கும் உபகாரமானது இலக்கணம்.

"முன்னூ லொழியப்
பின்னூ லெவற்றினும்
நன்னூ லுக்கிணை யாதும் இல்லை"

என்கின்றது இலக்கணக் கொத்து. நன்னூலுக்குச் சிவஞானமுனிவரின் திருத்தத்தோடு கூடிய விருத்தியுரை, மணியாரம் போல நன்னூலின் மதிப்பைப் பெரிதும் உயர்த்தி விட்டது. நாவலர் எழுதிய நன்னூற் காண்டிகை உரை சிவஞான முனிவரைத் தழுவியது. பகுபத முடிபு முதலிய பயன்படும் அம்சங்களோடு கூடியது. எங்கும் நிலை பெற்று நிலவுகின்றது.

'நன்னூற் காண்டிகை உரையும் நாவலர் பெருமானும்' என்ற ஆராய்ச்சிக் கட்டுரை, நன்னூலுக்கெழுந்த உரைகளின் ஒற்றுமை வேற்றுமைகளையும், காண்டிகை பிறந்த வரலாற்றையும் ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டுகின்றது.

ஆராய்ச்சி ஆசிரியர் வித்துவான் எவ். எக். ஸி. நடராசா அவர்களின் மதிநுட்பமும், ஆராய்ச்சித் திறனும் கற்றோர் உலகிற் பிரசித்தமானவை.

மேற்குறிப்பிட்ட ஆராய்ச்சிக் கட்டுரை, நன்னூலுரைகளை ஆராய்வதற்கு அருமையானதொரு நல்விருந்து.

கலாசாலை வீதி,
திருநெல்வேலி,
யாழ்ப்பாணம்.
1-10-82

இலக்கிய கலாநிதி
பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை

இலக்கண வித்தகர்,

பண்டிதர் இ. நமசிவாயம் ஜே. பி. அவர்கள்

அளித்த

## அணிந்துரை

வித்துவான் எவ். எக்ஸ். ஸி. நடராசா அவர்களால் ஆக்கப்பட்ட 'நன்னூற் காண்டிகை உரையும் நாவலர் பெருமானும்' என்னும் ஆய்வு நூலை வாசித்துப் பார்த்தேன். இது இன்று வரை வெளிவந்த நன்னூற் பதிப்புக்களிற் பலவற்றை ஒப்புநோக்கி எழுதப்பட்டுள்ளது. இதிற் பல விடயங்கள் ஐயப்படுத்தப்பட்டும் சில விடயங்கள் தெளிவு படுத்தப்பட்டுமுள்ளன. விசேடமாக, நாவலர் பெருமான் சிவஞான முனிவரின் திருத்தத்தோடு கூடிய சங்கரநமச்சிவாயப் புலவரின் உரைவழி நின்று புத்துரை ஒன்றினை வகுத்தார் என்பது பல்லாற்றானும் ஆராய்ந்து வலியுறுத்தப் பட்டுள்ளது. மேலும் ஆராயப்படவேண்டிய பத்து விடயங்கள் பற்றிய குறிப்புக்களும் தரப்பட்டுள்ளன. வித்துவான் நடராசா அவர்களின் நுண்மாண் நுழைபுலத்தின் பயனாகத் தோன்றிய இந்நூல், பெரியதோர் ஆராய்ச்சி நூல் தோன்றுவதற்கு வழிசெய்து நிற்கின்றது. தமிழுலகம் இந்நூலை விரும்பியேற்றுப் பயன் கொள்ளுவதாக.

இலக்கண விடயங்களில் அக்கறை அரிதாகிய இக்காலத்தில் இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்திய காரைநகர்த் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் நற்பணி அறிஞர்களாற் பாராட்டற் பாலதாகும்.

மயிலிட்டி தெற்கு, இ. நமசிவாயம்
தெல்லிப்பழை.
12-10-82

# நன்னூற் காண்டிகை உரையும் நாவலர் பெருமானும்

நாவலர் பெருமான், சமயம், தமிழ் என்னும் இரண்டிற்கும் அளப்பருஞ் சேவை புரிந்தவர்; தனித்துவம் நிறைந்தவர்; சிறந்த பேச்சாளர்; உத்தமர் ஏத்தும் உரையாசிரியர்; நூல்களைப் பிரதி பேதமின்றியும் பிழையறவும் பதிப்பித்த பேராசான். நன்னூலோ எனின், பலர் கைப்பட்டது; பலராலும் உரை எழுதப்பட்டது; பதிப்பிக்கவும்பட்டது. சிவஞானசுவாமிகளாலே திருத்தப்பட்ட சங்கரநமச்சிவாயர் விருத்தியுரையினை 1851இல் நாவலர் பதிப்பித்தார். அவர், நன்னூலுக்குக் காண்டிகை உரையொன்றினை எழுதி வைத்திருந்தார். அவ்வுரை அவர் இயற்கை எய்திய பின்னரே பதிப்பிக்கப் பட்டது. இவற்றையெல்லாம் உள்ளிட்டே 'நாவலர் பெருமானும் நன்னூற் காண்டிகை உரையும்' என அமையவேண்டிய மகுடநாமம், இங்கு முன்பின்னாக மாறி நிற்கின்றது.

நாவலர் பெருமான், தமது வித்தியாநுபாலன அச்சியந்திரசாலை வாயிலாக 1851இல் தமிழ்கூறும் நல்லுலகிற்கு அளித்த நன்னூல் விருத்தியுரை வெளியீடே அந்நூலுக்கு வாய்த்த முதற் பதிப்பாகும். அதே விருத்தியுரையினைத் தமது குறிப்புகளுடன் வெளியிட்ட மகா வித்துவான் ச. தண்டபாணிதேசிகர், முகவுரையில் மற்றொரு விதமாகக் கூறியுள்ளார். "இவ்வுரையின் அருமையை உணர்ந்து, சென்னை அரசியலார் கல்லூரியில் முதன்முதலாகத் தமிழ்ப் புலமை நடாத்திய திருத்தணிகை விசாகப்பெருமாளையர் அவர்கள் சில குறிப்புக்களுடன் முதன்முதல் அச்சிட்டனர்" என்பது அது. இஃது ஆராய்ச்சிக்குரிய ஒன்றாகும்.

நன்னூல் விருத்தியுரைப் பதிப்புப் பற்றி வேறு எவரும் குறிப்பிடவில்லை. எனினும், சி. வை. தாமோதரம் பிள்ளை, இலக்கண விளக்கப் பதிப்புரையில், "சரவணப் பெருமாளையர் நன்னூற்கோர் காண்டிகையுரை செய்து அச்சிற்

பதிப்பித்தனர்'' என்று குறிப்பிட்டுள்ளார். வேறு சிலர், விசாகப்பெருமாளையரே காண்டிகை உரை எழுதிப் பதிப்பித்தாரென்பர். இது நிற்க,

முகவை இராமாநுசகவிராயர், தாம் இயற்றிய நன்னூல் உரையினை 1847 ஆம் ஆண்டிற் பதிப்பித்தார். இது விருத்தியுரையா காண்டிகையுரையா என்பது கேள்வியாகும். விடையினைக் கவிராயர் நூற்பதிப்பைக் கொண்டே வாசகர்கள் அறிந்துகொள்ளும் பொருட்டு அந்நூலின் முகப்பிலும் இறுதியிலும் உள்ளனவற்றை ஈண்டுத் தருகின்றோம்.

*[நூன் முகப்பில் உள்ளது]*

நன்றாக

**நன்னூல் விருத்தியுரை**

இவ்வுரை

இயற்றமிழாசிரியராகிய

இராமாநுசகவிராயராற் செய்யப்பட்டது.

இது

இராமாநுச காண்டிகையெனச்

சிறப்புப் பெயரிடப்பட்டுச்

சஞ்சீவிராயன்பேட்டையில்

அவரது அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சாலிவாகன சகாப்தம் 1768ல் செல்லாநின்ற
பிலவங்க ௵ மார்கழி ௴

இதன் விலை ரூபா 5



*[நூலின் இறுதியில் உள்ளது]*

நன்னூலுக்கு இயற்றமிழாசிரியராகிய இராமாநுசகவிராயராற் செய்யப்பட்ட விருத்தியுரை முற்றிற்று. இதற்கு இராமாநுச காண்டிகையெனச் சிறப்புப் பெயருமவராலிடப்பட்டது. அங்ஙனமாயின் காண்டிகை உரையும் விருத்தியுரையும் வெவ்வேறன்றோ? விருத்தியுரையைக் காண்டிகையுரை யென்றதென்னெனின்,

''ஐய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி'' என்றாதலால் காண்டிகை விருத்தியுரைக்கு அவயவமாம். ஆகவே, அவயவ ஆகுபெயராய் அவயவியாகிய விருத்தியுரை மேனின்றதென்க.

கவிராயர் கூற்றுப்படி அவருரை பல்லாற்றானுங் காண்டிகையாக அமைந்து கிடக்க, ஒரோவழி விருத்தியாகவும் மிளிர்கின்றது. அதனால் இதனைக் காண்டிகையுட்பட்ட விருத்தி எனக் கருதுவாரும் உளர்.

திருத்தணிகை விசாகப்பெருமாளையர் நன்னூலுக்கோர் உரை கண்டனர். இவ்வுரை 1840இல் பதிப்பிக்கப்பட்டதென்பர். அப்பதிப்பை யாம் கண்டிலேம். மற்று அவருரை பன்முறை பதிப்பிக்கப்பட்டதெனவுங் கூறுவர். 1868இல் ஒரு பதிப்பும், 1879இல் இன்னொரு பதிப்பும் வெளிவந்திருந்தன. அவற்றைப் பார்வையிடும் வாய்ப்பு எமக்குக் கிடைத்துள்ளது. ஐயரது காண்டிகை உரைக்குச் சேயூர் முத்தையமுதலியாரால் சிறப்புப் பாயிரம் வழங்கப்பட்டது. அப்பாயிரத்தில், சேது நாட்டை ஆண்ட அண்ணாசாமியின் அருந்தவப் புதல்வன் சிங்காரமுதலி வேண்ட ஐயர் இவ்வுரையைச் செய்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அண்ணாசாமி சேது நாட்டை ஆண்ட காலம் 1812 — 1845 ஆகும். ஆகவே, ஐயரின் உரை 1840 இல் வெளிவந்ததென்பது பொருத்தமுடையதாகும். இஃது இங்ஙனமிருப்பவும், சீனி வேங்கடசாமி நன்னூற் காண்டிகை உரையினை

விசாகப்பெருமாளையர் 1875இல் வெளியிட்டனர் என்று கூறினர்.

மேலும் போப்பையர், 'நன்னூலும் பொழிப்புரையும்' என்ற பெயரில் தாம் எழுதிய பொழிப்புரையினை 1858இல் வெளியிட்டார். சவுந்தரநாயகம்பிள்ளை, இருநூற்றுக்கு மேற்பட்ட சூத்திரங்களுக்குத் தாம் எழுதிய உரையுடன் 'நன்னூற் சுருக்கம்' என்ற பனுவலை 1862இல் வெளியிட்டார்.

தனிப்பாடற்றிரட்டு என்ற நூலினை முதன்முதலாக உருவாக்கிய சந்திரசேகரக் கவிராய பண்டிதரும் வாளாவிருக்கவில்லை. நன்னூலைப் பதிப்பித்துள்ளார். அவர் பதிப்பித்த நன்னூல் தலைப்புத்தாள் (Title Page) பின்வருமாறு அமைந்து கிடக்கின்றது.

கடவுள் துணை

சனகபுரம்

பவணந்தி முனிவர் செய்த

நன்னூல் மூலமும்

திருநெல்வேலிச் சங்கரநமச்சிவாயப் புலவராற் செய்யப்பட்டுத்

திருவாவடுதுறையாதீனச்

சிவஞானசுவாமிகளாற்றிருத்தப்பட்ட

விருத்தியுரையும்

இயற்றமிழாசிரியராகிய

திருத்தணிகை

விசாகப்பெருமாளையரவர்களாற்

செய்யப்பட்ட பதவுரையும்

அஷ்டாவதான

வீரசாமிச் செட்டியாரவர்கள் முன்னிலையில்



தில்லையம்பூர்

சந்திரசேகர கவிராஜ பண்டிதரால் பார்வையிடப்பட்டு

வில்லிபுரம் இராமசாமி முதலியாரால்

முத்தமிழ் விளக்க அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

இராக்ஷச ஸு கார்த்திகை மீ

இதன் பக்கங்கள் 342

விலை ரூபா 2-12

இப்பதிப்பு 1855இல் வெளிவந்தது. வேறு விபரங்கள் பெற முடியவில்லை.

திருமயிலை சண்முகம்பிள்ளையும் நன்னூல் விருத்தியுரையைப் பதிப்பித்தார் என்பர். கோமளபுரம் இராஜகோபாலபிள்ளையும் 1880இல் நன்னூற் காண்டிகையுரையைப் பதிப்பித்ததாகச் சீனி வேங்கடசாமி கூறியுள்ளார். தேடியுங் கண்டிலேம். இராஜகோபாலபிள்ளை படித்த மனிதர்; நூற்பதிப்புகளில் 'திருவிளையாடல்' செய்து 'திருகுதாளம்' போடுகின்றவர் என்பது பொது மக்கள் கூற்று. இன்னுஞ் சில காண்டிகை உரைப் பதிப்புகளும் உண்டு. அவையெல்லாம் 1880க்குப் பின்னர் வந்தவை. நன்னூல் மூலத்தை மட்டும் பதிப்பித்தவர் பலர்.

இனி, நாவலர் பேரில் வந்த நன்னூற் காண்டிகையுரைப் பதிப்பை நோக்குவோம். இவர் பதிப்பு ஒன்று 1880இல் வெளிவந்தது. இதனை மறுப்பாரில்லை. எனினும், இதுதானோ முதற்பதிப்பு என்று சந்தேகப்படுவாரும் உளர். இதன் இரண்டாம் பதிப்பு பார்த்திப ஸு ஆவணி மீ (1885) வெளிவந்ததாக அதன் தலைப்புத் தாளிற் காணப்படுகிது. ஆகவே, 1880இல் வந்த பதிப்பே முதற் பதிப்பாகும்.

கணேசையர் நினைவு மலரில், 'ஈழநாட்டு உரையாசிரியர்கள்' என்ற தலைப்பில் பீதாம்பரன் எழுதிய குறிப்

புகளுக்கு அப்பாற் செல்லமுடியாத கலாநிதி ஒருவர் அவற்றை நம்பி இடருற்றனர். பீதாம்பரன் கூறியதாவது:-

"விசாகப்பெருமாளையர் உரை அச்சுவாகனமேறியபின் ஐயர் அவர்களின் காண்டிகை உரையே பெரிதும் பயிலப்படலாயிற்று. இதனைக் கூட்டியும் திருத்தியும் புதுக்கியும் வினாக்களுடன் வெளியிட்டவர்களுள் ஒருவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர். இதுவே 'நாவலர் காண்டிகை உரை' என யாவராலும் போற்றப்பட்டு இன்றும் பெருவழக்கிலிருப்பது."

இவ்வாறு எழுத முற்பட்டமை ஆராய்ச்சியின்மையாலாகும். இக்கூற்றினைப் பேராராய்ச்சியின் முடிபென்று கொண்ட கலாநிதி, தாம் இயற்றிய 'பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்' என்ற பனுவலுக்குச் சான்றாதாரமாக இதனைக் காட்டி இன்புறுவாராயினர். நாவலர் பதிப்பில் 'இருத்தியும் விளக்கியும் கூட்டியும் புதுக்கியது' என்றுதானிருக்கிறது. பீதாம்பரன் விளக்கியும் என்பதை மறதி காரணமாக விட்டுவிட்டார் போலும். இது நிகழ்ந்தது 1960 இல். அவ்வாண்டில் 'தமிழ் வரலாற்றிலக்கணம்' என்ற நூல் வெளிவந்தது. அது பேராசிரியர் ஆ. வேலுப்பிள்ளையால் எழுதப்பட்டது. அவர் அந்நூலில் 23 ஆம் பக்கத்தில், "நன்னூற் காண்டிகை உரையை ஆறுமுகநாவலர் கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் வெளியிட்டார். அதே நூற்றாண்டைச் சேர்ந்த வீரசைவராகிய விசாகப் பெருமாளையர் நன்னூலுக்குக் கருத்துரை பதப்பொருள் உதாரணம் என்பன உடைய முக்காண்டிகை செய்தாரென்றும், ஆறுமுகநாவலர், வினா விடை என்னும் இரண்டையும் அதனோடு சேர்த்து ஐங்காண்டிகையாகிய காண்டிகை உரை செய்தாரென்றும் கூறுவர் சிலர்" என்று எழுதியுள்ளார். இக்கூற்றுக்குத் தாம் பொறுப்பில்லையென்று உறுதி கூறியும் போந்தார்.

இதன் பின்னர், முன்பு குறிப்பிட்ட கலாநிதி, தாம் எழுதிய தமிழ் இலக்கியத்தில் ஈழத்தறிஞரின் பெரு



முயற்சிகள்' என்ற நூலில் "இவற்றைப் பயின்றவர்கள் தொடர்ந்து தமிழ் மொழியைப் பயில வழக்கிலிருந்த உரைகளில் மாணவர்களுக்கு விளங்கவேண்டுவனவற்றை மேலும் விளக்கியும், அவர்கள் தெரிந்து கொள்ளவேண்டிய குறிப்புகள் பல கூட்டியும், பகுபத முடிபு சில காட்டியும், சொல்லிலக்கண சூசி சேர்த்தும், இன்றியமையாத அப்பியாசங்களைத் தொகுத்தும் நாவலர் புதிய முறையில் நன்னூலுக்குக் காண்டிகையுரை எழுதினார்" என்று கூறியுள்ளார். அவரது கூற்றுகளை நுனித்து நோக்கும்போது முன்பின் முரண்பாடு இருத்தல் புலனாகின்றது.

பின்னர், நாவலர் நூற்றாண்டு விழா மலரில் வெளிவந்த 'நாவலரின் இலக்கண முயற்சிகள் — தாக்கமும் விளைவும்' என்ற கட்டுரையில், அதன் ஆசிரியர், "கலாநிதி கூறுவது பொருத்தமான கருத்தாகும். 'வழக்கிலிருந்த உரைகளில்' எனப் பொதுவாக அவர் கூறினாலும் விசாகப் பெருமாளையரின் நன்னூற் காண்டிகையுரையே நாவலரின் திருத்தத்தற்கு அடிப்படையாக அமைந்தது எனக் கூறலாம்" என்று முடிவு கட்டி எழுதியுள்ளார்.

நாவலர் பத்துப் பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப் படைக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை இருக்கவும் அதற்குச் சிறந்த உரைகண்டும், உரையில்லாத வேறு நூல்களுக்கு உரை எழுதியும் பதிப்பித்தவர். அப்பதிப்புகளில் திருத்தியோ கூட்டியோ என்று அடை புணர்த்தாதவர். நன்னூற் காண்டிகை உரையில் மட்டும் திருத்தியும் விளக்கியும் கூட்டியும் புதுக்கியது என்ற அடை புணர்த்தியிருந்தார் என்று கருதுவது சிறிதும் பொருந்துவதாக இல்லை.

நாவலரின் நன்னூற் காண்டிகை உரை, அவர் இயற்கை எய்திய பின்னர் அவரின் உத்தம சீடர் சதாசிவப்பிள்ளையாற் பதிப்பிக்கப்பட்டது. சதாசிவப்பிள்ளை மாந்தருள் மாணிக்கம்; நல்ல மனிதர்; நாவலரின் பணிக்காகத் தம்மை வெகுவாக அருப்பணித்தவர்; நாவ

லரைப் பெருமைப் படுத்தும் நோக்கமாக இந்த அடைமொழிகளைப் பெய்தனர் போலும்.

நன்னூலின் பற்பல பதிப்புகளையும் உரைகளையும் ஒருங்கே வைத்துக்கொண்டுசீர்தூக்கிப் பார்க்கும்போது நாவலர், விசாகப்பெருமாளையர் பதிப்பைத் திருத்திப் புதுக்கினரல்லர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போலப் புலனாகும். நாவலர் சரித்திரம் எழுதிய கைலாசபிள்ளையும் நன்னூலுக்கு நாவலரே காண்டிகை உரை எழுதினர் என்பர்.

சிவஞானமுனிவர் திருத்திய சங்கரநமச்சிவாயர் உரையுடன் பொருந்திய நன்னூல் விருத்தியுரையைப் பதிப்பித்த நாவலர், அதனைக் கைவிட்டு விசாகப்பெருமாளையர் காண்டிகைப் பதிப்பைத் திருத்தினர் என்பது அனுபவத்திற்குப் பொருந்தக்கூடியதாக இல்லை. இவ்வுரைகளை ஒப்பிட்டுப் பார்க்கும் வாய்ப்புப் பெருதோர் ஆராய்ச்சி, விழலுக் கிறைத்த நீராகும்.

விசாகப்பெருமாளையரின் உரையைத் திருத்தியும் விளக்கியும் கூட்டியும் புதுக்கியதென்பார், அங்ஙனம் அமைந்த பகுதிகளைச் சுட்டிக்காட்டாது வறிதே அழுத்திச் சொல்வதால் உண்டாகும் அறிவுப் பெருக்கம் யாது? நன்னூல் விருத்தியுரை வழிநின்றும் அதற்கு மேலும் இலக்கண விதிகளைத் தந்து 1873இல் 'இலக்கணச் சுருக்கம்' என்ற நூலை எழுதிய நாவலர், முரண்பட்ட குறிப்புகளோடு கூடிய விசாகப்பெருமாளையரின் உரையைத் தழுவி நூல் செய்தாரென்றல் புத்திபூர்வமாகப் பொருந்துவதாயில்லை. நாவலர், தாம் பதிப்பித்த விருத்தியுரையினைத் தழுவியும் கூட்டியும் விளக்கியும் திருத்தியும் புதுக்கியும் காண்டிகை உரையினை வகுத்தனர் என்பதே சாலவும் பொருந்துவதாம். இவற்றிற்காய சில எடுத்துக்காட்டுக்களைக் கீழே காண்போம்.



"மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்தி"

என்பது நன்னூற் சிறப்புப் பாயிரத்தின் ஒருபகுதி. இதற்குச் சங்கரநமச்சிவாயர், நாவலர், விசாகப்பெருமாளையர் என்னும் மூவரும் எழுதியுள்ள உரை வருமாறு:

சங்கரநமச்சிவாயர்: பரந்தவிடத்தையுடைய உலகத்தின்கண்ணே — நிறைந்த கண்ணிருள் கெட — விளங்குங்கதிரை விரித்து — கட்பொறிக்கு விடயமாகிய உருவமனைத்தினையுங் காட்டும் — சூரியனைப்போல — உலகுக்கெல்லாந் தானொரு முதலேயாகி — தோற்றமும் ஒடுக்கவும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகியவற்றை இயல்பாகவே நீங்கி நிற்றலாற்றலைவனாகிய — ஞானமே திருமேனியாகவுடையான்.

நாவலர்:- பரந்தவிடத்தையுடைய உலகத்தின்கண்ணே — நிறைந்த கண்ணிருள் கெட — விளங்குங் கிரணத்தை விரித்து — கட்பொறிக்கு விடயமாகிய உருவங்களெல்லாவற்றையுங் காட்டுஞ் சூரியனைப்போல — உலகங்களுக்கெல்லாந் தானொரு முதலேயாகி — தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகிய இவைகளின் இயல்பாகவே நீங்கி நிற்றலினாலே தலைவனாகிய — ஞானமே திருமேனியாக உடையவன்.

**விசாகப்பெருமாளையர்:-** பரந்தவிடத்தையுடையவுலகத்தில் — நிறைந்தவிருள் கெட — விளங்கு கிரணத்தை விரித்து — கண்களுக்குத் தெரியத் தக்க உருவங்களையெல்லாம் காட்டுகின்ற சூரியனைப்போல — உலகங்களுக்கெல்லாம் தானொரு முதலாகி – பிறப்பும் இறப்பும் உபமானமும் அளவும் விருப்பமும் வெறுப்பும் ஆகியவிவைகளிற் சுபாவமாக நீங்கிநிற்கையினாலே தலைவனாகிய — ஞானமே திருமேனியாகவுடையவன்.

சங்கரநமச்சிவாயர் விருத்தியுரையைத் தழுவி ஒரு சில மாற்றங்களுடன் நாவலர் உரை செல்வது கண்கூடு. சூத்திரங்களைக் கண்ணழித்து உரை கூறும் வகையிற்கூட நாவலர் சங்கரநமச்சிவாயரைப் பின்பற்றியுள்ளார்.

317ஆம் சூத்திர உரை, சங்கரநமச்சிவாயரை முற்றுகத் தழுவிச் செல்வதையும் அங்கு எழுதப்பட்ட பல பகுதிகள் ஐயருரையிற் காணப்படவில்லையென்பதனையும் நாம் மனத்திற் கொள்ளல் வேண்டும்; சில சொற்றொடர்கள் மாற்றியமைக்கப்பட்டிருப்பதனையும் கவனித்தல் வேண்டும்.

பொதுப்புணர்ச்சிபற்றிக் கூறும் 158 ஆம் சூத்திர உரையில், 'இயல்பினும் விதியினும்' என்ற பிரயோகம் முதன்முதல் வருகிறது. நாவலர் இதனை முன்னர் உள்ள சூத்திரத்தில் விளக்கியுள்ளார் சங்கரநமச்சிவாயர் பின்னர் உள்ள சூத்திரத்தில் விளக்கியுள்ளார். ஐயர் இதனை எச்சூத்திரத்திலும் விளக்கினாரல்லர்.



இனி, ஐயருந் தமது உரையினைச் சங்கரநமச்சிவாயரைத் தழுவிச் செய்துள்ளாரென்பது அவருரைக்குச் சேயூர் முத்தையமுதலியார் செய்த உரைப்பாயிரத்தால் அறியக்கிடக்கின்றது. ஆகவே, "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பமுங் கூறி அழியா மரபினது வழிநூலாகும்" என்பதற்கிணங்க அவர் உரை எழுதுவாராயினர். எனவே, ஐயரின் உரையே நாவலரின் திருத்தத்திற்கு அடிப்படையாக அமைந்தது என்று கூறுவது பொருந்தாது. இதனைத் தமிழ் கூறு நல்லுலகம் அறிதல் வேண்டும்.

ஐயர், கருத்து பதப்பொருள் காட்டு என்ற மூன்றுறுப்புங் கொண்ட காண்டிகை உரையினை வகுத்தார். நாவலர், இவற்றுடன் வினாவினைக் கூட்டிக் காண்டிகை உரை எழுதினார். விடையோடு பொருந்திய காண்டிகை உரை எழுதியவர் இதுவரை எவருமிலர்.† ஆகவே, நாவலர் ஐங்காண்டிகை உரை எழுதினார் என்ற கூற்றும் பொய்யாகின்றது. அவர், வினாவகையைக் கூட்டி எழுதினபடியாலேதான் சதாசிவப்பிள்ளை கூட்டியும் என்ற அடைமொழியைப் புகுத்தினார் எனச் சிலர் தவறாகக் கருதுவர். நாவலர் பல விடயங்களைக் கூட்டி எழுதியுள்ளார் எனக் கொள்ளலே பொருத்தமுடைத்து. 'கூட்டியும்' என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகள் தருவாம்.

நாவலர், நன்னூற் காண்டிகை உரையில், பொதுவாக எல்லாச் சூத்திரங்களுக்கும் முன்னர், தலைப்புக் கொடுத்திருப்பது கண்கூடு. இத்தலைப்புகளிற் சில, சங்கரர், ஐயர் உரைகளில் வேறு உருவத்திற் காணப்படுகின்றன. எனினும் விளக்கங் குறைவு. 238 ஆம் சூத்

---

†வாசுதேவ முதலியார், விசாகப்பெருமாளையர் எழுதிய காண்டிகை உரையினைப் புதுக்கி, அதனுடன் வினாவினையும் விடையையுஞ் சேர்த்து, 1900 ஆம் ஆண்டில் ஐங்காண்டிகை உரை பதிப்பித்துள்ளார்.

திர உரையில் நாவலர், உருபு புணர்ச்சி, வேற்றுமைப் புணர்ச்சி என்ற புணர்ச்சி வகைக்கு வரைவிலக்கணங் கூறியுள்ளார். மேலும் பல உதாரணங்கள் தந்து விரித்து இரு பக்கங்கள் எழுதியுள்ளார். மற்றையோர் அரைப் பக்கங்கூட எழுதினரல்லர்.

விருத்தியுரையுள் வடமொழிப் புணர்ச்சி காட்டப் படவில்லை. ஐயர் உரையிலும், அதன் பின்னர் வந்த காண்டிகை உரைகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஐயரின் உரையில் விளக்கம் போதியதாயில்லை; ஒழுங்காகவுமில்லை; பிழைபடவுங் கூறப்பட்டிருக்கிறது. நாவலர் பதிப்பில் முறையாக எழுதப்பட்டிருக்கிறது. என்றாலும் நன்னூற் காண்டிகை உரை விளக்கந் தந்த புலோலி வ. குமாரசாமிப் புலவர், புத்தம் புதிய வகையில் சங்கத மொழி வாயிலாகவும் இனிது விளக்கியுள்ளார். ஐயர், தத்திதாந்தம் என்ற வடமொழி இலக்கண முறையினைப் புணர்ச்சியுட் காட்டி இடர்ப்பட்டுள்ளார்.

மேலும், நாவலர் ஏலவே இலக்கணக் கொத்து, பிரயோகவிவேகம் முதலிய இலக்கண நூல்களைப் பதிப்பித்து நிறைந்த அனுபவம் பெற்றவர். அங்ஙனம் பதிப்பித்த நூல்களில் வந்துள்ள புதிய கருத்துகளைத் தாம் இயற்றிய நன்னூற் காண்டிகை உரையிற் சேர்த்துள்ளார். எடுத்துக்காட்டாக, ''எல்லையின்னு மதுவும்'' என்று தொடங்கும் 319 ஆம் சூத்திர உரையில், ''எட்டு வேற்றுமைகளுள், எட்டாவதும் ஆறுவது மொழிந்த ஆறு வேற்றுமைப் பொருள்களும் வினை கொண்டு முடியிற் காரகமெனப் பெயர் பெறும். ஆறுவதும், வினைப் பெயர் கொள்ளின், அப்பெயர் பெறும்'' என்று குறிப்பிட்டு இலக்கணக்கொத்துச் சூத்திரங்களையும் தந்துள்ளமையைக் குறிப்பிடலாம். இது சங்கரநமச்சிவாயரிலும் இல்லை; ஐயரிலும் இல்லை.

இனி, விளக்கியும் என்பதற்குச் சில உதாரணங்கள் தருவாம். ''இரண்டு முதலா மிடையாறுருபும்'' என்ற



தொடக்கத்தினையுடைய 363 ஆம் சூத்திரத்துக்கு நாவலர் உரையிற் காணப்படும், ''இனி ஆசிரியர் தொல்காப்பியனார் ஐயுங் கண்ணுமல்லாப் பொருள்வயின் - மெய்யுருபு தொகா விறுதியான'' என்று ஆரம்பிக்கும் பந்தியும் அடுத்த பந்தியும் சங்கரநமச்சிவாயர் உரையிலும் இல்லை; ஐயர் உரையிலும் இல்லை. அப்பந்திகள் உரை விளக்கமாக நாவலரால் எழுதப்பட்டனவாகும்.

''ஒழியிசை வினு'' என்று தொடங்கும் 423 ஆம் சூத்திர உரையில், ''சிறப்பு, உயர்வு சிறப்பும் இழிவு சிறப்பும் என இரு வகைப்படும். உயர்வு சிறப்பு ஒரு பொருளினது உயர்வைச் சிறப்பித்தல். இழிவு சிறப்பு ஒரு பொருளினது இழிவைச் சிறப்பித்தல். இங்கே சிறப்பித்தல் என்றது, உயர்வேயாயினும் இழிவேயாயினும் அதனது மிகுதியை விளக்குதல்'' என்று நாவலர் விளக்கியுள்ளார்.

254, ஆம் 255 ஆம் சூத்திரங்களுக்கு நாவலர் கூறிய உரைவிளக்கம் சங்கரர், ஐயர் என்பாரின் உரைவிளக்கங்களை விஞ்சி நிற்பதைக் காண்டல்கூடும். நாவலர் சங்கரரைப் பொதுவாகப் பின்பற்றியே விரிவுபடுத்தியுள்ளார். ஐயரில் இவற்றின் உரை விளக்கம் சாதாரணமானதே. இவ்வகையில் வந்த விளக்கங்களை நாவலர் உரையிற் பல இடங்களிற் காணலாம்.

ஐயரும் சங்கரரும், ''உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்'' என்ற 238 ஆம் சூத்திரம், ''உயிரீற்றுப் புணரியற் கண்ணும் இவ்வியற் கண்ணும் முடிந்த வேற்றுமைப் புணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதியுணர்த்துகின்றது'' என்றனர். இச்சூத்திரத்துக்கு நாவலர் கொடுத்த தலைப்பு 'வேற்றுமைப் பொருட் புணர்ச்சியை உருபு புணர்ச்சியோடு மாட்டெறிதல்'' என்பதாம். நாவலரின் விளக்கம் தெளிவாகவும் விஞ்சியுமிருப்பதை நாம் அவதானிக்கலாம்.

இனி, நாவலர் திருத்திய விடயத்தைக் கவனிப்பாம்.

உத்தியான் அமைக்கும் பொருளை உத்தி என்றது ஆகுபெயர். இது சங்கரநமச்சிவாயரின் கூற்று. இதனைச் சிவஞான முனிவரும் ஒப்புக்கொண்டார். ஐயரும் வழிமொழிந்தார். மகா வித்துவான் ச. தண்டபாணிதேசிகர் இதனை விளக்குமுகத்தால் 'உத்தி என்னும் கருவியின் பெயர், அதனால் அமைக்கும் பொருளாகிய காரியத்துக்கு ஆனமையின் கருவியாகுபெயர்' என்று அடிக்குறிப்பு எழுதியிருக்கிறார். இராமாநுசகவிராயர் வாளா ஆகுபெயர் என்று எழுத, குறிப்புரை எழுதிய கோவிந்தராஜ முதலியார் காரண ஆகுபெயர் என்றார். நாவலரோ 'தந்திரம் என்பது நூல், உத்தியென்பது பொருந்துமாறு' என்று எழுதிப் போந்தார்; ஆகுபெயர் என்றாரல்லர். சுன்னைக் குமாரசுவாமிப் புலவர், புலோலிக் குமாரசுவாமிப் புலவர் என்போரும் ஆகுபெயர் என்றாரல்லர். இவ்வகை எழுத்தால் நாவலர் சங்கரருரையினைத் திருத்தினார் என்பது தெளிவாகின்றது.

இனி, நாவலர் புதுக்கிய விடயங்களைக் கவனிப்பாம். சங்கரர், ஐயர் இருவரிலும் காணப்படாத பல புது விடயங்களை நாவலர் உரையிற் காண்டல் கூடும். 343 ஆம் சூத்திரத்தில், உரையிற் கோடல் என்னும் உத்தியாற் பெறப்படும் பொருள்களை நாவலர் வெகுவாக விமரிசித்து எழுதியுள்ளார். தமிழில் விமரிசனம் வளர்ச்சியடையவில்லை என்பார்க்கு அறிவூட்டுவதாக இது அமைந்துள்ளது.

ஆரியமொழி வடமொழியாதற்குச் சிறப்புவிதி கூறுஞ் சூத்திரமாகிய 147இல் ஆணித்தரமான குறிப்பொன்றை நாவலர் எழுதியுள்ளார். இக்குறிப்பு, பிறரெவரும் எழுதிய உரைகளில் இடம் பெறவில்லை. அது பின்வருமாறு:-



"முப்பத்து மூன்றுமெய், மொழிக்கு முதலில் அகரமாகத் திரியுமென்றல் பொருந்தாது; கெடுமென்றலே பொருந்தும். அரன், ஆடகம், இமம், ஏரம்பன், ஓமம் ஓனத்திரி என வரும். இவைகளிலே ஹகாரமெய் கெட அம்மெய்மேல் ஏறி நின்ற உயிர் நிற்றல் காண்க."

இது நாவலரின் இலக்கணப் பயிற்சிக்கும், நிறைந்த இலக்கியத் தேர்ச்சிக்கும் எடுத்துக்காட்டாக அமைகின்றது.

யாவற்றையும் நன்கு நோக்கும்போது, நாவவர், சங்கரர் உரையின் வழிநின்று பல்லாற்றானும் புத்துரை ஒன்றினை வகுத்துச் சென்றாரென்பதும், அவர் திருத்தியும் விளக்கியும் கூட்டியும் புதுக்கியும் வைத்திருந்த பூரணமான நன்னூற் காண்டிகை உரையினை, அஃது திருந்தபடியே சதாசிவப்பிள்ளை பதிப்பித்தாரென்பதும் நன்கு வலியுறுத்தப்படுகின்றன. இதுவுந் நிற்க,

ஐ, அம் என்னும் தொழிற் பெயர் விகுதிகள் வினைமுதற் பொருளையும் செயப்படுபொருளையும் கருவிப்பொருளையும் உணர்த்தும். இவற்றில் 'அம்' என்னும் விகுதி செயப்படுபொருளை உணர்த்துவதற்கு உதாரணமாகத் 'தேட்டம்' என்பதை, தாம் எழுதி 1873 இல் வெளியிட்ட 'இலக்கணச் சுருக்கம்' என்னும் நூலில் நாவலர் காட்டியிருக்கிறார். ஆனால், அவரால் அதே விடயத்துக்கு நன்னூற் காண்டிகை உரையில், தொல்காப்பியம்' என்ற உதாரணம் காட்டப்பட்டிருக்கிறது. இலக்கணச் சுருக்கத்திலே தரப்பட்டுள்ள உதாரணம் (தேட்டம்) மிகமிகப் பொருத்தமாக இருப்பவும் காண்டிகை உரையிலே தரப்பட்டுள்ள உதாரணம் (தொல்காப்பியம்) ஆராய்ச்சிக்குரியதாக அமைந்திருக்கின்றது. அன்றியும் அவர், தாம் கூட்டி எழுதிய இலக்கண அமைதியிலும் பகுபத முடிபில் தொல்காப்பியம் என்பதைச் செயப்படுபொருட் பெயர்ப் பகுபதம் என்றே குறிப்பிட்டுள்ளார்.

'அம்' என்ற தொழிற்பெயர் விகுதிக்கு விசாகப் பெருமாளையர் காட்டிய உதாரணமும் 'தொல்காப்பியம்' ஆகும். அவரின் மாணுக்கராகிய மழவை மகாலிங்க ஐயரும் தமது 'தமிழ் இலக்கணம்' என்ற நூலில், 'தொல்காப்பியம்' என்பதையே உதாரணமாகக் காட்டியுள்ளார். விசாகப்பெருமாளையரின் நன்னூற் காண்டிகை உரையின் புதுக்கிய பதிப்பு வாசுதேவ முதலியாரால் 1900 ஆம் ஆண்டு பதிக்கப்பட்டது. அதில், 'தொல்காப்பியம்' என்பது நீக்கப்பட்டு 'நீத்தம்' என்பது வருவிக்கப்பட்டிருக்கிறது.

நான்கு + நான்கு என்பன 'நன்னுன்கு' என்றே புணருமென்று போப்பையர் எழுதியுள்ளார். ஆனுல், 283 ஆம் சூத்திர உரையில் 'நந்நான்கு' என்றும் எழுதியுள்ளார். சடகோபராமாநுஜாசாரியரும் 'நன்னுன்கு' என்றே புணருமென்று தமது பதிப்புகள் சிலவற்றிற் குறிப்பிட்டுள்ளார். ஏனையோர் 'நந்நான்கு' என்றே புணர்த்தியுள்ளார்கள்.

இவ்விடயங்கள் அறிஞர்களால் ஆராயப்பட வேண்டியனவாகும்.

இனி, நன்னூல் தொடர்பாக ஆராயப்படவேண்டிய சில குறிப்புகள்.

1. இராமாநுசகவிராயர், போப்பையர், பவானந்தம்பிள்ளை என்போர் 'பொதுவியல்' என்னும் பகுதியை நன்னூலிலே ஈற்றில் வைத்துள்ளார்கள். நியாயமுங் கூறியுள்ளார்கள். மற்றையோர் அவ்வாறு செய்யவில்லை.

2. தொல்காப்பியம் ஐந்திரம் வழி நின்றது. நன்னூல் பாணினீயம் வழி நின்றது.

3. 'இடையியல்', 'உரியியல்' என்று நாவலர் உட்படச் சிலரும், இடைச்சொல்லியல், உரிச்சொல்லியல் என்று மற்றையோரும் இவ்வியல்களின் தலைப்புகளைப் பதிப்பித்துள்ளனர். இது விளங்குமாறில்லை. பவணந்தியாரின் கூற்று எவ்வாறிருந்தது என்பது ஆராயப்படுதல் வேண்டும். நாவலர், தொல்காப்பியர் வழிநின்ருர் போலும்.



4. இராமாநுசகவிராயர் சூத்திரங்களிலே பல திருத்தம், பிரதி பேதங்கள் காட்டியுள்ளார்.

5. நன்னூற் காண்டிகை உரை விளக்கஞ் செய்த வ. குமாரசுவாமிப் புலவர் வடமொழிப் புணர்ச்சியை வேறு வகையில் விளக்கியுள்ளார்.

6. ஒன்பதாவது சூத்திரம் வெண்பாவாலாயது. இதனை மயிலைநாதர் சூத்திரமாகக் கொள்ளவில்லை. அதனுல் அவருடைய சூத்திரத் தொகை 461 ஆகின்றது.

7. நன்னூல் ஆசிரியர் பவணந்தி. நந்தி வருமொழி. நிலை மொழி யாது?

8. பவணந்தி முனிவரின் தந்தை சன்மதிமுனி என்கிருர் சைமன் காசிச்செட்டி. சொந்தத் தந்தையா? ஞானத் தந்தையா?

9. பவணந்தியார் வாழ்ந்த இடம் சனகையென்று பாயிரங் கூறுகின்றது. இதனை மயிலைநாதர் சனநாதபுரம் என்கிருர். மற்றையோர் சனகாபுரம் என்கின்றனர்.

10. நன்னூலைப் புகழ்வாருமுளர்; இகழ்வாருமுளர். புகழ்தலுக்குரிய காரணங்கள் எவை? இகழ்தலுக்கான ஆதாரங்கள் எவை?

இவற்றுள் ஒரு சிலவற்றை ஆராய்ந்து ஆய்வுக்கட்டுரைகள் பலரால் எழுதப்பட்டுள்ளன. அச்சிடப்படாதவை பல.

## நன்னூற் பதிப்புகள்

1. 1835 தாண்டவராய முதலியார் - மூலம்

2. 1839 - 1840. விசாகப் பெருமாளையர் - காண்டிகையுரை

3. 1847 இராமாநுசகவிராயர் - காண்டிகை விருத்தி

4. 1845 - 51. English Version of the Celebrated Tamil Nunnool - Commentary Sungara Nama Sivayur by W. Joyes and S. S. Pillai - 6 பகுதிகளாக.

5. 1851 - சங்கரநமச்சிவாயர் - விருத்தியுரை. ஆறுமுக நாவலர் பதிப்பு.

6. 1855 - சங்கரர் விருத்தியுரை. விசாகப்பெருமாளையர் பதவுரை. சந்திரசேகர கவிராச பண்டிதர் பதிப்பு.

7. 1858 - ஜீ. யூ. போப்பையர் - நன்னூல் மூலமும் மொழிப்புரையும்.

8. 1868 - விசாகப்பெருமாளையர் - காண்டிகையுரை

9. 1876 Introduction to the Nannul by H. Bower

10. 1878 An English Translation of the Nannul by a graduate (J. Lazarus)

11. 1879 விசாகப்பெருமாளையர் - காண்டிகையுரை

12. 1880 ஆறுமுகநாவலர் - காண்டிகையுரை

13. 1885 நாவலர் - காண்டிகையுரை. இரண்டாம் பதிப்பு

14. 1897 சடகோபராமாநுஜாசாரியர் + கிருஷ்ணமாசாரியர் - காண்டிகையுரை.



15. 1900 விசாகப்பெருமாளையர் காண்டிகையுரையைப் புதுக்கிப் பதிப்பித்தார் ப. வாசுதேவமுதலியார். பரீட்சை வினவும் விடையுஞ் சேர்க்கப்பட்டன.

16. 1902 வ. குமாரசுவாமிப் புலவர் - நன்னூற் காண்டிகையுரை விளக்கம்

17. 1918 மயிலைநாதர் உரை - பதிப்பு உ. வே. சாமிநாதையர்

18. 1922 பவானந்தம்பிள்ளை - காண்டிகையுரை. மயிலைநாதர், சங்கரநமச்சிவாயர், இராமாநுச கவிராயர் முதலிய உரையாசிரியர்களைப் பின்பற்றி எழுதிய உரை

19. 1925 சங்கரநமச்சிவாயர் உரை - உ. வே. சாமிநாதையர் பதிப்பு

20. 1940 இராமாநுசகவிராயர் உரை - கா. ர. கோவிந்தராஜ முதலியார் பதிப்பு

21. மாதவச் சிவஞான சுவாமிகள் இயற்றிய புத்தம்புத்துரை என்னும் விருத்தியுரை - திருவாவடுதுறை ஆதினப் பதிப்பு.
பதிப்பாசிரியர்: மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்.

22. 1862 நன்னூற் சுருக்கம் - ஜீ. பீ. சவுந்தரநாயகம்பிள்ளை

இவற்றுட் பல, மேலும் பல பதிப்புகள் கண்டவையாகும்.